[22nd September 1958

(ஆ) அவைகளில் எத்தனை ஹரிஜன தெருக்களுக்கு நடைபாதை, கிணறு, மின்சாரம், ரேடியோ, விளையாடுமிடங்கள் அமைக்கப்பட்டுள்ளன?

THE HON. SRI C. SUBRAMANIAM :—

| | | |
|---|---|---|
| (a) | Stage I Blocks ... ... .. ... ... ... | 11 |
| | Stage II Blocks ... ... ... ... ... | Nil |
| | Community Development Blocks ... ... ... | 8 |
| | Total ... | 19 |

(b) A statement [a] indicating the amenities provided for the benefit of Harijans is placed on the table of the House.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தஞ்சை ஜில்லா தேசீய விஸ்தரிப்புத் திட்டப் பகுதிகளில் உள்ள சேரிகளுக்கு மின்சார விஸ்தரிப்போ, ரேடியோ வசதியோ அதிகமாக இருப்பதாகக் கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களிலிருந்து தெரியவில்லை. ஆகையால், இனியாவது அரசாங்கம் கவனித்து ஹரிஜன சேரிகளுக்கு இந்த வசதிகளைச் செய்து கொடுப்பதற்கு தீவிர நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த கம்யூனிடி டெவலப்மென்ட் ப்ளாக்குகளிலும், தேசீய விஸ்தரிப்புத் திட்ட ப்ளாக்குகளிலும் எந்த அளவு ஹரிஜனங்களுக்கு வசதிகள் செய்துகொடுக்கப்பட வேண்டுமென்பதைப்பற்றி திட்டமிடப்பட்டிருக்கின்றன. அந்தத் திட்ட அடிப்படையிலேதான் வசதிகளைப் பெருக்கமுடியும்.

*Salary of District Board Teachers*

* 422 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) when the pay for February and March 1958 of the teachers working in the elementary and high schools run by the Tiruchirappalli District Board was paid ; and

(b) the steps taken by the Government to make payments for every month in the next succeeding month?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) and (b) A statement [b] is placed on the table of the House.

SRI S. LAZAR : ஒவ்வொரு ஜில்லா போர்டிலிருந்தும், குறிப்பாக திருச்சி ஜில்லாவிலிருந்து ஒவ்வொரு வருஷ பட்ஜெட் முன் கூட்டியே அரசாங்கத்திற்கு வருகிறதா? அப்படி வருகிற பட்ஜெட்டை அனுசரித்து முன் கூட்டியே பணம் அனுப்பாததற்குக் காரணம் என்ன? இனிமேலாவது முன்கூட்டியே பணம் அனுப்ப வசதி செய்யப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே எவ்வளவு தூரம் சர்க்காருடைய உதவி கொடுக்க முடியும் என்பதைப்பற்றி அவ்வப்போதுதான் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. 1958–59–ம் வருஷத்தைப் பொறுத்த வரையில் போதுமான நிதி வசதி எல்லா ஜில்லா போர்டுகளுக்கும் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்தப் பிரச்னை எழாது என்று நான் நம்புகிறேன்.

[a] Printed as Appendix V on page 489 infra.

[b] Printed as Appendix VI on pages 490–491 infra.

**Sri M. S. SELVARAJAN:** திருச்சி ஜில்லா ஆசிரியர்களுக்குத் தக்க நேரத்தில் பணம் அனுப்ப முடியாததால் திருச்சி ஜில்லா போர்டுக்கு என்ன நிலைமை இருக்கிறதோ, அதேபோன்ற நிலைதான் இதர ஜில்லா போர்டுகளிலும் இருக்கிறது. அதற்கு உரிய காரணம் என்ன? பரிகாரம் என்ன?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** எல்லா ஜில்லா போர்டுகளுக்கும் இந்த நிதிப் பிரச்னை இருந்து வந்திருக்கிறது. 1958–59-ம் வருஷத்தைப் பொறுத்த வரையில் போதிய தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்களை, பஞ்சாயத்துக்கள் யூனியன் இவைகளைப்பற்றி இன்று நாம் பரிசீலனை செய்யப்போகிறோம். அதிலே, இந்த ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இதுமாதிரி செலவழிக்கப் போதுமான நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறதென பலத்த கனம் அங்கத்தினர்கள் கவனிப்பார்கள் என்று நான் நம்புகிறேன்.

*Sweets and drinks*

* 423 *Q*.—Sri S. LAZAR: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government are aware that crude sweets (மிட்டாய்கள்) and drinks (colour waters) are being sold in large quantities during festivals in rural parts;

(*b*) whether these contribute to the outbreak and spread of epidemics like cholera, dysentery, etc.;

(*c*) whether the persons who sell the above sweets and drinks are licensed holders and whether their preparations are subject to inspection by health staff; and

(*d*) the steps taken by the Government to see that such preparations are fit for human consumption?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** (*a*) Yes, Sir.

(*b*) Only when they are unwholesome.

(*c*) Yes. The preparations are subject to inspection by Health Staff.

(*d*) The relevant provisions of the Madras Public Health Act are enforced.

**Sri N. MAHALINGAM:** 1957-ம் வருஷ இறுதியில் நடந்த பப்ளிக் ஹெல்த் போர்ட் கூட்டத்திலே ஐஸ் ப்ரூட்டுகளினால் பல கெடுதிகள் ஏற்படுவதால் அதைத் தடை செய்யவேண்டுமென்று அரசாங்கத்திற்கு சிபார்சு செய்தது உண்டா? அது சம்பந்தமாக அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** சிபார்சு, செய்தது உண்டு. அதைப் பரிசீலனை செய்து, எந்த வகையிலே அதைத் தடுக்க முடியும் என்று சட்டபூர்வமாக ஆராயப்பட்டு வருகிறது.

**Sri S. LAZAR:** சட்டம் ஏற்கனவே இருந்து வருகிறது. ஆனால், இதுபோன்ற தொத்து நோய் அதிகமாக ஏற்படுவதற்குக் காரணம் என்ன என்று கேட்கும்போது, இதுபோன்ற பண்டங்கள் விற்கப்படுவதுதான் காரணம் என்று அடிக்கடி கூறுகிறார்கள். ஆகவே, இதை முதலில் தடுக்க நடவடிக்கை என்ன எடுத்திருக்கிறார்கள்?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** நல்ல வகையிலே இந்தப் பண்டங்களைச் செய்யாதபோதுதான் அத்தகைய நோய்க்கு இடமேற்படுகிறது, ஆகையால், அந்த மாதிரி "அன்ஹோல்ஸம்" என்று ஏற்பட்டால், அதைப்